# ஈசாவாஸ்யோப நிஷத்தின் ஸாரமும் பரிசிஷ்டமும்

சாஸ்த்ரரத்னாகர பண்டிதராஜ போலகம்
ஸ்ரீராம சாஸ்திரிகள் எழுதியது

# ஈசாவாஸ்யோபநிஷத்தின்
# ஸாரமும் பரிசிஷ்டமும்


சாஸ்த்ரரத்னுகர பண்டிதராஜ போலகம்
ஸ்ரீராம சாஸ்திரிகள் எழுதியது.





ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1.

# ஈசாவாஸ்யோபநிஷத்தின் ஸாரம்

ஈசுவரனையும் என் குருக்களையும் தியானம் செய்து கொண்டு, நான் ஈசாவாஸ்யோபநிஷத்தில் கூறப் பட்ட பொருளை ஸ்ரீ பகவத்பாதரின் பாஷ்யத்தை அநுசரித்துச் சுருக்கிக் கூறுகிறேன்.

ईशं ध्यात्वा गुरूंश्चेशावास्योपनिषदीरितम् ।
अर्थं संगृह्य वक्ष्येऽहं भगवत्पादवर्त्मना ॥ १ ॥

ஈசம் த்யாத்வா குரூம்ச்சேசாவாஸ்-
யோபநிஷதீரிதம் ।
அர்த்தம் ஸங்க்ருஹ்ய வக்ஷ்யேஹம்
பகவத்பாதவர்த்மநா ‖ 1

உலகில் மந்தமான இருளில் உண்மையான கிளிஞ்சல் மறைந்து அதில் ப்ராந்தியால் வெள்ளி தோன்றுவதுபோல், அஞ்ஞானத்தால் உண்மையான பரமாத்ம ஸ்வரூபம் மறைந்து, அதில் ப்ராந்தியால் உலகம் தோன்றுகிறது. அங்கு வெளிச்சத்தில் உண்மை யான கிளிஞ்சலைக் கண்டு, பொய்யான வெள்ளியைப் பார்க்காமல் மறைப்பதுபோல, சாஸ்த்ராசார்யோப தேசத்தால் உண்மையான பரமாத்ம ஸ்வரூபத்தைக் கண்டு, பொய்யான உலகத்தைத் தோன்ருமலிருக்

கும்படி மறைக்க வேண்டும். உலகத்தைக் காண்கிற அஜ்ஞானிகளுக்கு ஆத்ம ஸ்வரூபம் காணுது. ஆத்ம ஸ்வரூபத்தைக் கண்ட ஜ்ஞானிகளுக்கு உலகம் காணுது.

ஒரு சில்பி பிரபுக்களுடைய கிருகத்தின் முன் புறத்தில் திருடர்கள் வராமலிருக்கக் கல்லால் நாயுருவம் அமைத்து வைக்கிருன். அதை நாய் என்று சிலர் பிரமிக்கிருர்கள். கல் என்று சிலர் எண்ணு கிருர்கள். அவ்விடத்தில் 'கல்லைக் கண்டால் நாயைக் காணும், நாயைக் கண்டால் கல்லைக் காணும்' என்று ஒரு பழமொழி சொல்வதுண்டு. அதுபோலத் தான் இதுவும் என்று அறிக.

அஜ்ஞானத்தால் பொய்யான உலகம் தோன்றும் வரையில் ஜீவன் சம்சார பந்தத்தில் கட்டுண்டு கஷ்டப் படுகிருன். ஆகையால் ஜ்ஞானத்தால் பொய் உலகம் தோன்ருமலிருக்கும்படி பாதித்துத் தள்ளிவிட்டு ஆத்மாவை ரக்ஷிக்க வேண்டும். தனம், மித்யை பொய்யானது. அது தன்னுடையதானுலும் பிறருடைய தானுலும் அதற்கு ஆசைப்படக் கூடாது.

ராகத்வேஷம் முதலிய தோஷங்கள் விலகி அந்தக்கரணம் சுத்தமானுல்தான், அதில் ஆத்மஜ் ஞானம் ஏற்படும். அதற்காகச் சித்தம் சுத்தமாகும் வரையில் ஆசையை விட்டு, சுருதி ஸ்மிருதிகளில் கூறிய நித்ய கர்மங்களை அஜ்ஞானி செய்தேயாக வேண்டும் என்பது 1, 2-ஆவது மந்திரங்களின் பொருள்.

ईशा वास्यमिदं जगद्धि वितथं सत्येन शुक्त्या यथा
भ्रान्तं रूप्यमथाऽऽत्मनोऽखिलजगत्त्यागेन रक्षां क्रियात् ।
इच्छेत् स्वस्य परस्य वा नहि धनं मिथ्यास्वरूपं धिय-
श्शुद्धयै तत्त्वविदे श्रुतिस्मृतिमितं कुर्वीत कर्मास्पृहः ॥ २ ॥

ஈசாவாஸ்யமிதம் ஜகத்திவிததம்
ஸத்யேநசுக்த்யா யதா
ப்ராந்தம்ரூப்யமதாத்மநோகிலஜகத்
த்யாகேந ரக்ஷாம் க்ரியாத் ।
இச்சேத் ஸ்வஸ்ய பரஸ்யவா நஹிதநம்
மித்யாஸ்வரூபம் தியச்
சுத்யை தத்வவிதே ச்ருதிஸ்ம்ருதிமிதம்
குர்வீத கர்மாஸ்ப்ருஹ: ॥ 2

ஜனனம் மரணம் முதலியவையற்று நித்தியமாய் விளங்கும் உண்மையான ஆத்ம ஸ்வரூபத்தை அறியாமல் மறந்து நிற்கும் அஜ்ஞானிகள், ஆத்மாவைப் பிரகாசப்படுத்தாமல் மறைத்து வைப்பதனுல் ஆத்மஹத்தி செய்தவர்கள் ஆகிருர்கள். அவ்வித ஜனங்கள் ஆத்ம ஹத்தி செய்த குற்றத்தால், மரித்த பிறகு, அஜ்ஞானமாகிற அந்த தமஸ்ஸால் உண்மை மறைக்கப்பட்டதும், ஜ்ஞான பிரகாசமாகிய தேவத் தன்மையில்லாமல் அஸுரத்தன்மையுடைய அவிவேகிகளுக்கு உரியதுமாகிய லோகங்களை அதாவது ஸ்தாவரம் வரையிலுள்ள பல ஜன்மங்களை அடிக்கடி அடைவார்கள்.

ஆகையால் அவ்விதம் அடையாமலிருப்பதற்காக, எல்லா வஸ்துக்களிலும் உள்ளும் வெளியிலும் நிறைந்

திருப்பதும், உபாதிகளற்ற பரமாத்ம ஸ்வரூபமாய் வ்யாபகமும், சரீரமற்றதும், ஜ்ஞான ஸ்வரூபமும், புண்யபாபமற்றதும், அசையாமல் கூடஸ்தமாயிருப்பதும், கண் காது முதலிய இந்த்ரியங்களுக்குப் புலப்படாததும், ஜகத் காரணமும், உலகுக்குக் கர்ம பலமளிப்பதும், புத்தி முதலியவற்றுக்குப் பிரேரகமாயும் உள்ள ஆத்ம ஸ்வரூபத்தை எப்போதும் சிந்தித்து ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற வேண்டும் என்பது 3, 4, 5, 8-ஆவது மந்திரங்களின் பொருள்.

இங்கு ஆத்ம ஸ்வரூபத்தை விளக்கும்போது, 'அது அசைகிறது, அது அசையாது' என்பது முதலிய வாக்கியங்களால் பரஸ்பர விருத்தமான பல தர்மங்களையுடையதாக ஆத்ம ஸ்வரூபத்தை உபநிஷத்துக் கூறுவதில், அந்தக்கரணம் முதலிய உபாதிகளின் சம்பந்தத்தால் உபாதி தர்மங்களை ஆத்மாவில் ஆரோபித்து 'ஆத்மா அசைகிறது' என்றும், உபாதி ஸம்பந்தமற்ற ஆத்ம ஸ்வரூபத்தில் ஆரோபிக்க முடியாதபடியால் 'ஆத்மா அசையாது' என்றும் இந்தக் கருத்துடன் அவ்விதம் கூறுவதாகக் கொள்ள வேண்டும்.

ये के चात्महनो जना ध्रुवममी प्रेत्याभिगच्छन्ति तान्
लोकानन्धतमोवृता असुरलोकस्य स्वभूताश्च ये ।
तत् सर्वान्तरमात्मतत्वमचलं धीप्रेरकं चक्षुरा-
द्यग्राह्यं परमात्मरूपमनुपाध्येकं विचिन्त्यं सदा ॥ ३ ॥

யே கே சாத்மஹநோ ஜநா த்ருவமமீ
ப்ரேத்யாபிகச்சந்திதாந்
லோகாநந்ததமோவ்ருதா அஸுரலோகஸ்ய
ஸ்வபூதாச்சயே ।
தத் ஸர்வாந்தரமாத்மதத்வமசலம்
தீப்ரேரகம் சக்ஷுரா
த்யக்ராஹ்யம் பரமாத்மரூபமநுபாத்யேகம்
விசிந்த்யம் ஸதா ॥ 3

तदेजतीत्यप्यथ नैजतीति विरुद्धधर्मास्पदमात्मतत्वम् ।
श्रुतिर्यदाहैतदुपाधिमत्त्वानुपाधिताभ्यामिति वेदितव्यम् ॥ ४ ॥

ததேஜதீத்யப்யத நைஜதீதி
விருத்ததர்மாஸ்பதமாத்மதத்வம் ।
ச்ருதிர் யதாஹைததுபாதிமத்வாநுபாதி-
தாப்யாமிதி வேதிதவ்யம் ॥ 4

எவன் அவ்யாக்ருதமாகிய மாயை முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள எல்லாப் பூதங்களையும் அதாவது சரீரங்களையும் ஆத்மாவில் அவை கல்பிதங்களானபடி யால் ஆத்மாவைக் காட்டிலும் அவை வேறல்ல என்றும், அந்த எல்லாப் பூதங்களிலும் அதிஷ்டான மானபடியால் விசேஷமில்லாமல் வ்யாபித்து நிர்குண மாய் ஸாக்ஷியாக ஒரே ஆத்மா உள்ளது. அதாவது நான் இந்த எனது சரீரத்தில் எல்லா வ்ருத்திகளுக் கும் ஸாக்ஷியான ஆத்மாவாக எவ்விதம் இருக்கிறேனோ இவ்விதமே எல்லாச் சரீரங்களிலும் ஸாக்ஷியான ஆத்மாவாக இருக்கிறேன் என்று சாஸ்த்ராசார்யோப தேசத்தால் பார்க்கிறானோ அந்த வித்வானுக்கு

ஜுகுப்ஸை அதாவது அருவருப்பு, பயம், நிந்தை முதலியவை இல்லை. ஜுகுப்ஸை பண்ணுவதற்குரிய தன்னைக் காட்டிலும் வேறான துஷ்டமான வஸ்து கிடையாதல்லவா?

ஒரே ஆத்மாதான் உள்ளது, வேறு வஸ்து கிடையாது என்று பார்க்கும் ஜ்ஞானிக்கு, எந்தச் சமயத்தில் எல்லாப் பூதங்களும் ஆத்ம ஜ்ஞானத்தினால் ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறாக இல்லாமல் ஆத்ம ஸ்வரூபமாகவே ஆகிவிட்டனவோ, அந்தச் சமயத்தில் அஜ்ஞானத்தினால் ஏற்படக் கூடிய மோகம் சோகம் முதலியவை எப்படி ஏற்படும்? அவனுக்கு ஸமூலமாகச் சம்சாரபந்தம் விலகிவிடும் என்பது 6, 7–ஆவது மந்திரங்களின் பொருள்.

यस्त्वात्मन्यनुपश्यतीदमखिलं भूत तथाऽऽत्मानम-
    प्यन्यत्रानुगतं न तस्य विदुषो भूयाज्जुगुप्सादिकम् ।
सर्वं भूतमभूद्विजानत इदं स्वात्मैव नान्यद्यदा
    तत्रैकत्वमिहानुपश्यत इमाश्शोकाद्यवस्थाः कुतः ॥ ५ ॥

யஸ்த்வாத்மந்யநுபச்யதீதமகிலம்
    பூதம் ததாத்மாநமப்
யந்யத்ராநுகதம் ந தஸ்ய விதுஷோ
    பூயாஜ்ஜுகுப்ஸாதிகம் ।
ஸர்வம் பூதமபூத்விஜாநத இதம்
    ஸ்வாத்மைவ நாந்யத் யதா
தத்ரைகத்வமிஹாநுபச்யத இமாச்
    சோகாத்யவஸ்தாः குத: ॥ 5

9, 10, 11 ஆகிய மூன்று மந்திரங்களில், அவித்யை வித்யை இரண்டையும் ஒருவன் சேர்த்து அநுஷ்டிக்க வேண்டுமென்று எண்ணி நஹிநிந்தாந்யாயத்தால் தனித்தனியாக அவற்றை அநுஷ்டிப்பதை நிந்தித்து விட்டு, இரண்டினுலும் பலன் ஏற்படும், இரண்டையும் சேர்த்தே அநுஷ்டிக்க வேண்டும், அவித்யையால் மிருத்யு விலகும், வித்யையால் அம்ருதம் ஏற்படும் என்று கூறியிருக்கிறது. நஹிநிந்தாந்யாயமாவது, ஒன்றை நிந்திப்பதற்கு அதன் நிந்தையில் தாத்பர்ய மில்லை; வேறு ஒன்றை விதிப்பதிலேயே தாத்பர்யம் என்பது.

இவ்விடத்தில் அவித்யை என்பது, அவித்யா காலத்தில் செய்யக் கூடியதும் வித்யைக்கு விரோதியு மான கர்மா. வித்யை என்பது, தேவதோபாஸனம் அதாவது ஸகுண ப்ரஹ்ம த்யானம், ப்ரத்யகபிந்ந ப்ரஹ்ம ஜ்ஞானமன்று. அதாவது உபநிஷத்துக்களி லுள்ள மகாவாக்கியங்களால், சுத்தமான ஜீவஸ்வரூப மும் ப்ரஹ்ம ஸ்வரூபமும் ஒன்று என்று தெரிந்து ஸாக்ஷாத்கரித்தலாகிய ஜ்ஞானமன்று. ஏனென்ருல் ஜீவன் கர்த்தா இல்லை, போக்தா இல்லை, சுத்தன்; ஆகையால் அவன் ப்ரஹ்ம ஸ்வரூபமே என்று அறியும் அறிவும், நான் கர்த்தா போக்தா என்ற எண்ணத் துடன் செய்யப்படும் கர்மாவும் ஒன்றுக்கு ஒன்று விரோதமுள்ளவையாகையால், அவ்வித ஜ்ஞானமும் கர்மாவும் ஒரே சமயத்தில் ஒருவனுல் அநுஷ்டிக்கக் கூடியவையல்ல. ஆதலால் கர்மாவுக்கும் ஜ்ஞானத் துக்கும் அதிகாரி வெவ்வேறு. உபாஸனத்துக்கும் கர்மாவுக்கும் அவ்விதம் விரோதமில்லை. ஆகையால் அவ்விரண்டையும் ஏக காலத்தில் அநுஷ்டிக்கமுடியும்.

இங்கு வித்யை அவித்யை இரண்டையும் சேர்த்து அநுஷ்டிக்கும்படி கூறியிருப்பதனுல், வித்யை என்பது உபாஸனமே, ஜ்ஞானமன்று என்று அறிக.

ஆகையால் ஜ்ஞானம் வருவதற்கு முன்பு, அஜ்ஞானவஸ்தையில் ஜ்ஞானத்துக்கு வேருன ஸகுண ப்ரஹ்மோபாஸனமாகிய தேவதோபாஸனத்தை, அஹங்க்ரஹமாக அதாவது நானே ஸகுண ப்ரஹ்மம் என்று நினைத்துக்கொண்டு, அதே சமயத்தில் கர்மாவையும் ஸமுச்சயமாக அநுஷ்டிப்பவன், அர்ச்சிராதி மார்க்கம் என்ற பிரகாசமயமான மார்க்கத்தால் ப்ரஹ்ம லோகம் சென்று தேவதா ஸாயுஜ்யம் பெற்று, அங்குள்ள போகங்களை அநுபவித்துவிட்டுக் கல்ப முடிவில் ஆத்மஜ்ஞானம் பெற்று முக்தியடையலாம். இவ்விதமான க்ரம முக்தியே இங்கு அம்ருதம் என்று கூறப்படுகிறது. மிருத்யு என்பது, நிஷித்தமான ஸ்வாபாவிக கர்ம ஜ்ஞானங்கள். அவை கர்மாநுஷ்டானத்தினுல் விலகுகின்றன; அபர மோக்ஷம் என்று கூறப்படும் தேவதாஸாயுஜ்யம் பிரஹ்ம லோக ப்ராப்தி உபாஸனத்தினுல் ஏற்படுகிறது என்பது மேற்கூறிய மூன்று மந்திரங்களின் பொருள்.

विद्येत्युपासनमिहाविद्येति पदेन कर्म च ग्राह्यम् ।
तदुभयसमुच्चयेन ब्राह्मं लोकं विशत्यमृतकल्पम् ॥ ६ ॥

வித்யேத்யுபாஸநமிஹாவித்யேதி
பதேந கர்ம ச க்ராஹ்யம் ।
ததுபயஸமுச்சயேந ப்ராம்ஹம்
லோகம் விசத்யம்ருதகல்பம் ॥ 6

ज्ञानं कर्म विभज्य कीर्तितमतो नैवैकदा तद्द्वयं
ज्ञानादन्यदहंग्रहात्म सगुणध्यानं तु कर्मान्वितम् ।
ब्राह्मं लोकमुपासकं नयति शुक्लेनाध्वना तद्भवं
भुक्त्वा भोगमथाऽऽत्मवेदनमवाप्यान्ते क्रमान्मुच्यते ॥ ७ ॥

ஜ்ஞாநம் கர்ம விபஜ்ய கீர்திதமதோ
நைவைகதா த்த்வயம்
ஜ்ஞாநாதந்யதஹம்க்ரஹாத்ம
ஸகுணத்யாநம் து கர்மாந்விதம் |
ப்ராம்ஹம் லோகமுபாஸகம்
நயதி சுக்லேநாத்வநா தத்பவம்
புக்த்வா போகமதாத்மவேதநமவாப்யாந்தே
க்ரமாந்முச்யதே ॥ 7

12, 13, 14 ஆகிய மூன்று மந்திரங்களில், ஸம்பூதி அஸம்பூதி இரண்டையும் ஒருவன் சேர்த்து உபாஸிக்க வேண்டும் என்ற எண்ணத்தால் தனித்தனியாக அவற்றை உபாஸிப்பதை நிந்தித்துவிட்டு, இரண்டு உபாஸனங்களினுலும் பலன் ஏற்படும், இரண்டு உபாஸனங்களையும் சேர்த்தே அநுஷ்டிக்க வேண்டும், விநாச பதத்தால் கூறப்படும் ஸம்பூத்யுபாஸனத்தால் ம்ருத்யு விலகும், அஸம்பூத்யுபாஸனத்தால் அம்ருதம் ஏற்படும் என்று கூறியிருக்கிறது.

இவ்விடத்தில் அஸம்பூதி என்பது, ஜகத் காரண மானபடியால் உத்பத்தி இல்லாமல் அநாதியாயும் அவ்யாகிருதம் அவித்யை முதலிய பதங்களின் பொருளாயுமுள்ள ப்ரகிருதி. ஸம்பூதி என்பது உத்பத்தியுடன் கூடிய கார்ய ப்ரஹ்மமாகிய ஹிரண்யகர்ப்ப

ஸ்வரூபம். அதுவே விநாசம் என்றும் மந்திரத்தில் கூறப்படுகிறது. ஆகவே 'संभूतिं च विनाशं च' என்ற 14-ஆவது மந்திரத்தின் ஆரம்பத்தில், 'असंभूतिम्' என்று இருக்க வேண்டும். சாந்தஸமாக அகார லோபம் வந்திருக்கிறது. विनाशेन मृत्युं तीर्त्वा संभूत्या' என்ற முடிவிலும் 'असंभूत्या' என்று அகார ப்ரச்லேஷம் செய்துகொள்ள வேண்டும்.

வ்யாக்ருதம் அவ்யாக்ருதம் என்று முறையாகக் கூறப்படும் ஹிரண்யகர்ப்பன் ப்ரகிருதி இரண்டையும் சேர்த்து உபாஸிப்பவன், ஹிரண்யகர்ப்போபாஸனத்தால் அணிச்வர்யம் அதர்மம் காமம் முதலிய மிருத்யுவின் ஜயமூலமாக அணிமாதி ஸித்திகளை அடையலாம். ப்ரகிருதியின் உபாஸனத்தால் ப்ரகிருதிலயம் என்று பௌராணிகர்களால் கூறப்படுவதும் ப்ரகிருதியில் வெகு காலம் லயித்தபடியால் துக்கானுபவமே இல்லாத ஓர் நிலையுமான அபரமோக்ஷத்தை அடையலாம் என்பது 12, 13, 14 ஆகிய மூன்று மந்திரங்களின் பொருள்.

प्रकृतिरसंभूतिपदात् ग्राह्या ब्रह्म च हिरण्यगर्भाख्यम् ।
कार्यं संभूतिपदाद्विनाशपदबोध्यतापि तस्यैव ॥ ८ ॥

ப்ரக்ருதிரஸம்பூதிபதாத் க்ராஹ்யா
ப்ரம்ஹ ச ஹிரண்யகர்பாக்யம் |
கார்யம் ஸம்பூதிபதாத்விநாச-
பதபோத்யதாபி தஸ்யைவ || 8

संभूतिं च विनाशं चेत्यत्रावर्णलोपनिर्देशः ।
तीर्त्वा संभूत्यामृतमित्यत्राकारसंश्लेषः ॥ ९ ॥

ஸம்பூதிம் ச விநாசம்
சேத்யத்ராவர்ணலோபநிர்தேச: ।
தீர்த்வா ஸம்பூத்யாம்ருதமித்ய-
த்ராகாரஸம்ச்லேஷ: ॥ 9

व्याकृतहिरण्यगर्भाद्यव्याकृतमपि समुच्चयेन पुमान् ।
ध्यात्वाणिमादिसिद्धीः प्रकृतिलयाख्यामृतं च संलभते ॥ १० ॥

வ்யாக்ருதஹிரண்யகர்பாத்யவ்யாக்ருதமபி
ஸமுச்சயேந புமாந் ।
த்யாத்வாணிமாதிஸித்தீ: ப்ரக்ருதிலயாக்யாம்ருதம்
ச ஸம்லபதே ॥ 10

சுக்ல யஜுர்வேதத்தைச் சேர்ந்த ஈசாவாஸ்யோபநிஷத்தில், காண்வ சாகை, மாத்யந்தின சாகை என்ற இரு சாகைகளின்படி ஸ்வல்பமாகப் பாடபேதம் உண்டு. காண்வ சாகையின் பாடத்தை அநுஸரித்துப் பகவத்பாதர் ஈசாவாஸ்யோபநிஷத்துக்குப் பாஷ்யம் இயற்றியுள்ளார். மாத்யந்தின சாகையின்படி, ஸம்பூத்யஸம்பூதிகளைப்பற்றிய 12, 13, 14 என்ற எண்ணிக்கையுள்ள மூன்று மந்திரங்கள், 9, 10, 11 என்ற எண்ணிக்கையுடன் முந்தியிருக்கின்றன. வித்யாவித்யைகளைப் பற்றிய 9, 10, 11 என்ற எண்ணிக்கையுள்ள மூன்று மந்திரங்கள், 12, 13, 14 என்ற எண்ணிக்கையுடன் பிந்தியிருக்கின்றன.

அந்த மாத்யந்தின பாடத்தை அநுஸரித்து, மேலே கூறிய மந்திரங்களுக்கும் ஸ்வல்ப மாறுதலுடன் வேறு பொருள் மாண்டுக்ய காரிகாபாஷ்யத்தின் மூன்ருவதான அத்வைதப்ரகரணத்திலுள்ள 25-ஆவது எண்ணிக்கை கொண்ட 'संभूतेरपवादाच्च' என்ற காரிகையின் பாஷ்யத்தில் கூறியிருக்கிறது.

ஸம்பூதி என்பது முன்போல் கார்ய ப்ரஹ்மமாகிய ஹிரண்ய கர்ப்ப ஸ்வரூபமே. ஆனுல் ஸம்பூதி பதத்துக்கு 'உத்பத்தியுள்ளது' என்ற அர்த்தமில்லை. 'सम्यग्भूतिरैश्वर्यं यस्यास्सा' என்ற வ்யுத்பத்தியால் 'அணிமாதி ஐச்வர்யமுள்ளது' என்று பொருள். அதற்கு வேருன கர்மா அஸம்பூதி என்ற பதத்தால் கூறப்படுகிறது. விநாசம் என்ற பதமும் கர்மா நச்வரமான பலத்தையுடையதாதலால் கர்மாவையே கூறுகிறது.

ஆகையால் கர்மாவையும் ஹிரண்யகர்ப்போபாஸனத்தையும் ஸமகாலத்தில் சேர்த்து அநுஷ்டிப்பவன் கர்மாவினுல் ஸ்வாபாவிகாஞ்ஞான ப்ரவிருத்தியாகிய மிருத்யுவை விலக்குகிருன். ஹிரண்யகர்ப்போபாஸனத்தால் அபரமோக்ஷமாகிய அமிருதத்தை அடைகிருன்.

ஸம்பூதியும் விநாசமும் ஒன்று என்று எண்ணிக்கொண்டு, 'संभूतिं च विनाशं च' என்ற மந்திரத்தில் கூறப்படும் இரண்டையும் வேறு படுத்துவதற்காக ஆரம்பத்தில் அகாரலோபமும் முடிவில் அகார ப்ரச்லேஷமும் காண்வ பாடத்தில் கூறியிருக்கிறது. மாத்யந்தின பாடத்தில் ஸம்பூதியும் விநாசமும் ஒன்றல்ல, வேறுதான் என்று எண்ணப்படுவதால் அகாரலோபமும் அகார ப்ரச்லேஷமும் வேண்டியதில்லை

என்பது விசேஷம். இவ்விதம் முந்திய மூன்று மந்திரங்களின் பொருள்.

இவ்விதமான கர்மா ஹிரண்யகர்ப்போபாஸனம் இரண்டும் அவித்யாவஸ்தையில் செய்யப்படுவதால் அவித்யை என்ற ஒரே பதத்தால் கூறப்படும். அந்த அவித்யையையும் வித்யையாகிய பரமாத்ம ஜ்ஞானத்தையும் ஒருவன் ஒரே காலத்தில் செய்ய முடியாது; அவித்யையும் வித்யையும் விரோதமுள்ளவையானபடியால். ஆகவே இங்கு ஸமஸமுச்சயம் இல்லை. உபாஸனகர்மஸமுச்சயாநுஷ்டானத்தினுல் புருஷ ஸம்ஸ்காரம் ஏற்பட்டு, ஆசை விலகி, சாஸ்த்ர விசாரம் செய்து, பிறகு பரமாத்மஜ்ஞானம் ஏற்படும். இவ்விதமான க்ரமஸமுச்சயமே வித்யை அவித்யை இரண்டுக்கும் இங்கே கூறப்படுகிறது.

இவ்விதம் க்ரமமாக அவித்யை வித்யை இவற்றின் ஸமுச்சயத்தை அநுஷ்டிப்பவன் உபாஸனகர்ம ஸமுச்சயாநுஷ்டானமாகிய அவித்யையால் மிருத்யுவை அதாவது கர்மபலராகமாகிய ஏஷணைகளுடன் கர்மாவில் ப்ரவிருத்தித்தலாகிய மிருத்யுவை விலக்குகிறுன். பிறகு சாஸ்த்ரார்த்த விசாரத்தினுல் ஏற்பட்ட பரமாத்ம வித்யையால் அமிருதத்தை, முக்கியமான பரமோக்ஷத்தை அடைகிறுன்; சம்சார பந்தத்திலிருந்து விடுபடுகிறுன். இவ்விதம் பிந்திய மூன்று மந்திரங்களின் பொருள்.

இங்கு, 'संभूत्यामृतमश्नुते', 'अविद्यया मृत्युं तीर्त्वा' என்று இரு மந்திரங்களில் கூறியிருக்கும் அமிருதமும் ம்ருத்யுதரணமும் அபரமோக்ஷமென்று கருதப்படும் ஒரே பலன்தான், பரமோக்ஷமன்று என்று அறிக.

ஸ்ரீ பகவத்பாதர் ஐதரேயோபநிஷத் பாஷ்யத்தின் ஆரம்பத்திலுள்ள விசாரத்தில், 'विद्यां चाविद्यां च' என்ற மந்திரத்தின் கருத்தைக் கூறும்பொழுது, வித்யைக்கும் அவித்யைக்கும் க்ரம ஸமுச்சயத்தையே கூறியிருக்கிருர்.

माध्यन्दिनपाठे खलु मन्त्रत्रितयद्विकं विपर्यस्तम् ।
तद्रीत्या त्वन्योऽर्थः प्रोक्तो माण्डूक्यकारिकाभाष्ये ॥ ११ ॥

மாத்யந்திநபாடே கலு மந்த்ரத்ரிதயத்விகம்
விபர்யஸ்தம் ।
தத்ரீத்யா த்வந்யோர்த: ப்ரோக்தோ
மாண்டுக்யகாரிகா பாஷ்யே ॥ 11

कर्मासंभूतिपदाद्विनाशपदतश्च संग्राह्यम् ।
संभूतिपदात् कार्यं ब्रह्मावर्णस्य लोपसंश्लेषौ ॥ १२ ॥

கர்மா ஸம்பூதிபதாத் விநாசபததச்ச
ஸங்க்ராஹ்யம் ।
ஸம்பூதிபதாத் கார்யம் ப்ரம்ஹாவர்ணஸ்ய
லோபஸம்ச்லேஷௌ ॥ 12

न स्त इह देवतादर्शनकर्मसमुच्चयादविद्याख्यात् ।
मृत्युं तीर्त्वा पश्चादुत्पन्ना या परात्मनो विद्या ॥ १३ ॥

ந ஸ்த இஹ தேவதாதர்சநகர்ம
ஸமுச்சயாதவித்யாக்யாத் ।
ம்ருத்யும் தீர்த்வா பச்சாதுத்பன்ன
யா பராத்மனோ வித்யா ॥ 13

तस्या बलादमृततां मुख्यामाप्नोति बन्धनिर्मुक्तः ।
संभूतिजममृतत्वं ह्यविद्यया मृत्युतरणमप्येकम् ॥ १४ ॥

தஸ்யா பலாதம்ருததாம்
முக்யாமாப்நோதி பந்தநிர்முக்த: ।
ஸம்பூதிஜமம்ருதத்வம் ஹ்யவித்யயா
ம்ருத்யுதரணமப்யேகம் ॥ 14

संभूत्युपासनमथो कर्मोभयमेकदा समुच्चयभाक् ।
विद्याविद्याद्वितयं न समुच्चितमेकदापि तु क्रमशः ॥ १५ ॥

ஸம்பூத்யுபாஸனமதோ கர்மோபயமேகதா
ஸமுச்சயபாக் ।
வித்யாவித்யாத்விதயம் ந ஸமுச்சிதமேகதாபி
து க்ரமச: ॥ 15

क्रमिकसमुच्चयमेवं विद्याविद्यापदार्थयोरुभयोः ।
मत्वा भाष्यकृदाहैतरेयभाष्येऽपि मन्त्रतात्पर्यम् ॥ १६ ॥

க்ரமிகஸமுச்சயமேவம் வித்யா-
வித்யாபதார்த்தயோருபயோ: ।
மத்வா பாஷ்யக்ருதாஹைதரேயபாஷ்யேபி
மந்த்ரதாத்பர்யம் ॥ 16

கர்மாவையும் ஸகுண ப்ரஹ்மோபாஸனத்தையும் சேர்த்து ஸமுச்சயமாக அநுஷ்டிக்கும் அதிகாரி, தன் உபாஸ்யமான தேவதையைத் தனக்கு மரணம் ஏற்படும் வரைவில் விடாமல் அஹறங்க்ரஹமாகத் தியானம் செய்துகொண்டிருந்து, தனக்கு மரண சமயம் வரும்

போது அந்திம ப்ரத்யயமாக உபாஸ்ய தேவதையின் ஸாக்ஷாத்காரம் தனக்கு ஏற்பட விரும்பி, அந்தத் தேவதையைத் தனக்குத் தன் ஸ்வரூபத்தைப் பிரகடனம் செய்யும்படிக்கும், தான் ப்ரஹ்ம லோகம் போவதற்கு அநுகூலமாகத் தனது லிங்க சரீரம் தனது ஸ்தூல சரீரத்திலிருந்து வெளிக் கிளம்பும் படிக்கும், தன்னை அர்ச்சிராதி மார்க்கம் என்ற நல்ல மார்க்கத்தால் அழைத்துக்கொண்டு ப்ரஹ்ம லோகம் போகும் படிக்கும், அதற்குப் பிரதிபந்தகமாக இருந்த பாவங்களை விலக்கும்படிக்கும், தேவதையைப் பிரார்த்திப்பதை ஈசாவாஸ்யோபநிஷத்தின் கடைசியிலுள்ள 15, 16, 17, 18 ஆகிய நான்கு மந்திரங்கள் கூறுகின்றன.

कर्मोपास्तिद्वयानुष्ठितिकृदधिकृतो देवतां प्रायणान्ते
ध्यात्वान्ते तत्स्वरूपप्रकटनमिह तां याचते मन्त्रशेषे ।
ब्राह्मं लोकं यियासुः तदधिगतिकृते लिङ्गदेहोत्क्रमं च
स्वीयाद्देहात् स्वकीयं नयनमपि सुमार्गेण पापौघहानिम् ॥ १७ ॥

கர்மோபாஸ்தித்வயாநுஷ்டிதிக்ருததிக்ருதோ
தேவதாம் ப்ராயணாந்தம்
த்யாத்வாந்தே தத்ஸ்வரூபப்ரகடனமிஹ
தாம் யாசதே மந்த்ரசேஷே |
ப்ராம்ஹம் லோகம் யியாஸு:
ததகிகதிக்ருதே லிங்கதேஹோத்க்ரமம் ச
ஸ்வீயாத்தேஹாத் ஸ்வகீயம் நயநமபி
ஸுமார்கேண பாபௌகஹாநிம் || 17

ஈசாவாஸ்யோபநிஷத்தின் ஸாரம் முற்றும்.

---

# ஈசாவாஸ்யோபநிஷத்ஸாரத்தின் பரிசிஷ்டம்

வித்யை அவித்யை என்ற இரண்டும் போலவே ஸம்பூதி அஸம்பூதி என்ற இரண்டும் மனிதனுல் உபாஸிக்கத்தக்கவை என்று ஈசாவாஸ்யோபநிஷத்தில் காண்வர்களும் மாத்யந்தினர்களும் 9, 10, 11, 12, 13, 14 என்ற எண்ணிக்கையுள்ள ஆறு மந்த்ரங்களால் கூறுகிருர்கள். காண்வ சாகை, மாத்யந்தின சாகை இரண்டின்படி அந்த ஆறு மந்த்ரங்களின் வரிசை கொஞ்சம் மாற்றிக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது, காண்வ பாடத்தின்படி 9, 10, 11 என்ற எண்ணிக்கையுள்ள முந்திய மூன்று மந்த்ரங்கள். மாத்யந்தின பாடத்தில் 12, 13, 14 என்ற எண்ணிக்கையுடன் பிந்திய மூன்று மந்த்ரங்களாக இருக்கின்றன. அந்த மந்த்ரங்களின் பொருளேயும் காண்வசாகை மாத்யந்தினசாகைப்படி முறையாக ஈசாவாஸ்யோபநிஷத் பாஷ்யத்திலும் மாண்டூக்ய காரிகா பாஷ்யத்திலும் பகவத்பாதர் வெவ்வேருகக் கூறியிருக்கிருர்.

அவ்விதம் வெவ்வேருகப் பொருள் கூறுவதற்குக் காரணம் என்ன? இரண்டு இடங்களிலும் ஒரேவிதமாக ஏன் பொருள் கூறக் கூடாது? என்ற சங்கை ஏற்படக் கூடுமானதால் அதற்குச் சமாதானம் ஸூக்ஷ்ம புத்தியால் அறியக் கூடிய விஷயமானதால், அது இங்கு விமர்சிக்கப்படுகிறது.

विद्याविद्याद्वितयमपि संभूत्यसंभूतियुग्मं
समन्त्रैष्णड्भिः कथितमुभयैः काण्वमाध्यन्दिनाख्यैः ।
पुंसोपास्यं मिथ इह विभिन्नक्रमाश्चापि मन्त्राः
तेषामर्थः कथित इह भाष्यद्वये भिन्नरूपः ॥ १ ॥

अर्थभेदस्य किं मूलं कुतश्चैकार्थता नहि ।
इत्येवं सूक्ष्मधीगम्यो विषयोऽत्र विमृश्यते ॥ २ ॥

ஈசாவாஸ்யோபநிஷத்தில் காண்வசாகையின் பாடப்படி 9, 10, 11 என்ற எண்ணிக்கையுள்ள மூன்று மந்த்ரங்களுக்குள் வித்யை அவித்யை என்ற இரண்டையும் சேர்த்து உபாஸிக்க வேண்டும் என்ற விருப்பத்தினுல் அவற்றைத் தனித் தனியாக உபாஸிப்பதை முதல் மந்த்ரத்தில் நிந்தித்துவிட்டு, இரண்டாவது மந்த்ரத்தில் இரண்டுக்கும் தனித் தனியாகப் பயனைக் குறிப்பிட்டு, மூன்ருவது மந்த்ரத்தில் இரண்டையும் சேர்த்து அநுஷ்டிக்க வேண்டும் என்று விதித்தது, அவ்விதம் சேர்த்து அநுஷ்டிப்பதில் அவித்யையால் மிருத்யுவை விலக்கி, வித்யையால் அமிருதத்தை அடையலாம் என்றும், 12, 13, 14 என்ற எண்ணிக்கையுள்ள மூன்று மந்த்ரங்களுக்குள் அஸம்பூதி ஸம்பூதி என்ற இரண்டையும் சேர்த்து உபாஸிக்க வேண்டும் என்ற விருப்பத்தினுல் அவற்றைத் தனித் தனியாக உபாஸிப்பதை முதல் மந்த்ரத்தில் நிந்தித்துவிட்டு, இரண்டாவது மந்த்ரத்தில் அஸம்பூதி ஸம்பூதி இரண்டையும் அஸம்பவம் ஸம்பவம் என்ற வேறு பதங்களால் குறித்து இரண்டுக்கும் தனித் தனியாகப் பயனைக் கூறிவிட்டு, மூன்ருவது மந்த்ரத்தில் ஸம்பூதி விநாசம் இரண்டையும் சேர்த்து அநுஷ்டிக்கும்படி

விதித்து, அவ்விதம் சேர்த்து அநுஷ்டிப்பதில் விநாசத்தால் மிருத்யுவை விலக்கி, ஸம்பூதியால் அமிருதத்தை அடையலாம் என்றும் கூறியிருக்கிறது.

இங்கே, பகவத்பாதர் பாஷ்யம் பண்ணும்பொழுது, "வித்யை என்பது ஹிரண்யகர்ப்பர் ஸகுண ப்ரஹ்மம் ஆகிய தேவதையின் உபாஸனம்; அவித்யை என்பது கர்மம்; இரண்டையும் சேர்த்து ஒருவன் ஒரே சமயத்தில் அநுஷ்டிக்கலாம்; இரண்டுக்கும் விரோதம் கிடையாது. வித்யை என்பதற்கு, நிர்குணப்ரஹ்மமாகிய பரமாத்ம ஜ்ஞானம் என்று பொருள் கூறுவது ஜ்ஞானத்துக்கும் கர்மாவுக்கும் ஒன்றுக்கு ஒன்று விரோதம் இருப்பதினுல் பொருந்தாது. கர்மாவினுல், மனிதனுக்கு அநாதியாக உள்ள நிஷித்த ஸ்வாபாவிக கர்மஜ்ஞானங்கள் என்னும் மிருத்யு விலகும். தேவதோபாஸனத்தினுல், ப்ரஹ்ம லோகம் சென்று தேவதாஸாயுஜ்யம் அடைதலாகிய அபரமோக்ஷம் ஸித்திக்கும். மேலும், வித்யை என்பது, நிர்குண ப்ரஹ்மஜ்ஞானமாகிய பரமாத்ம ஜ்ஞானம் என்று கூறும் பக்ஷத்தில், அதற்கு அர்ச்சிராதி மார்க்கத்தால் ப்ரஹ்மலோகத்தை அடைதலாகிய கதி கிடையாது; இங்கேயே மோக்ஷம் ஸித்திக்கிறது. ஆகையால் ஈசாவாஸ்யோபநிஷத்தில் 15-ஆவது மந்த்ரம் முதலியவற்ருல் உபாஸ்ய தேவதையினிடம் மார்க்கயாசனம் முதலியவை கூறப்பட்டிருப்பது பொருந்தாது. ஆகையால் தேவதோபாஸனமே வித்யை என்பது" என்று கூறியிருக்கிருர்.

ஸம்பூதி என்பது, முதல் முதலில் ப்ரஹ்மத்தினிடமிருந்து உண்டாவதினுல் காரியமாயுள்ள ஸூத்ராத்மா

எனப்படும் ஹிரண்யகர்ப்ப ஸ்வரூபம், அஸம்பூதி என்பது உண்டாகாமல் அநாதியாக உள்ள மூலப்ர கிருதி; அதாவது அவித்யை. இவ்விரண்டையும் சேர்த்து, உபாஸிக்கலாம்; விரோதமில்லை. 12, 13 ஆகிய இரண்டு மந்த்ரங்களிலும் உபாஸ்யமாயுள்ள அவ்விரண்டையும் முறையாக ஸம்பூதி அஸம்பூதி, ஸம்பவம் அஸம்பவம் என்று கூறிவிட்டு, 14-ஆவது மந்த்ரத்தில உபாஸிக்க வேண்டிய இரண்டையும் அவ் விதம் கூருமல், ஒன்றை ஸம்பூதிஎன்ற பதத்தால் கூறிவிட்டு, மற்றதை விநாசம் என்னும் வேறு பதத் தால் கூறியிருந்தாலும், முன்பு கூறிய ஸம்பூதி அஸம் பூதிகளையே அங்கும் கிரஹித்துக் கொள்ள வேண்டும். அவ்விதம் இல்லாமற் போனல், சேர்த்து உபாஸிக்கும் படி கூறியது, ஒன்றை அதை ஸ்தாபிப்பதற்காகத் தனித் தனியாக உபாஸிக்கக் கூடாது என்று மற் ரென்றை நிந்திப்பது, என்று ஏற்படுவதனல் பொருத் தமில்லாமல் போய் விடும். ஆகவே 12, 13 இல் கூறிய ஸம்பூதி அஸம்பூதிகளையே 14-இலும் கூறவேண்டும். அதில் விநாசம் என்னும் பதத்தினல், காரியமானதால் ஸ்வபாவத்தில் நசிக்கக கூடிய ஹிரண்யகர்ப்ப ஸ்வரூப மாகிய ஸம்பூதியைத்தான் கூறுவது பொருத்தம். அப்பொழுது, ''संभूतिं च विनाशं च' என்ற இடத்தில், விநாசமாகிய ஸம்பூதியைக் காட்டிலும் வேருன அஸம் பூதியைக் கூறுவதற்காக ஏற்பட்ட संभूतिं च என்பதை असंभूतिं च என்று படிக்க வேண்டும். 'அகாரலோபம் சாந்தஸம்' என்று வைத்துக் கொள்ளவேண்டும்.

'அவித்யையாகிய அஸம்பூதியும் அநாதியாக இருந்தாலும் ஸித்தாந்தத்தில் முடிவில் நாசமுள்ள

தானபடியால் விநாசபதத்தால் அவித்யையாகிய அஸம்பூதியைக் கூறலாமே; அப்பொழுது 'संभूतिं च' என்ற இடத்தில் அகார லோபம் கூறவேண்டாமே; அந்த இடத்தில் ஸம்பூதியையே கூறலாமே' என்று ஒரு சந்தேகம் இங்கு ஏற்படக்கூடும். அதற்குச் சாமாதானம் வருமாறு—

'मृत्युं तीर्त्वा संभूत्याऽमृतमश्नुते' என்ற நான்காவது பாதத்தில், 'असंभूत्या' என்று அகார ப்ரச்லேஷம் அவசியம் கூறவேண்டும். ஏனெனில், வியாகிருதமாகிய ஹிரண்யர்கர்ப்போபாஸனத்தைக் காட்டிலும் அதற்கும் காரணமானபடியால் உயர்ந்ததான அஸம்பூதி எனப்படும் அவியாகிருதோபாஸனத்துக்கு உயர்ந்த பிரகிருதிலயம் என்ற அமிருதபலம் கூறலாமே தவிர, ஹிரண்யகர்ப்போபாஸனத்துக்கு அதைக் கூறுவது பொருந்தாது. அதனுல், 'असंभूत्या-मृतमश्नुते' என்று அவ்விடத்தில் அகாரப்ரச்லேஷம் அவசியம் செய்ய வேண்டும். அதனுல் அமிருதபலனையுடையது அவ்யாக்ருதோபாஸனம் என்று ஏற்பட்டு விட்டதினுல், அதற்கு வேருன மிருத்யுதரணத்தைப் பலனுக உடையதாக, 'विनाशेन मृत्युं तीर्त्वा' என்ற வாக்கியத்தில் கூறப்பட்ட விநாசம் என்பது வ்யாக்ருதமான ஹிரண்யகர்ப்ப ஸ்வரூபம் என்று ஏற்படுகிறது. இதனுல், 'संभूतिंच विनाशंच' என்ற முதல் பாதத்திலும், அகாரலோபம் சாந்தஸமாக வந்ததாக ஒப்புக்கொண்டு, 'असंभूतिं च विनाशं च' என்றே படிக்க வேண்டும். ஹிரண்யகர்ப்போபாஸனத்தால் அணிமாதி ஸித்தி ஏற்பட்டு, அதன் மூலமாக அனேச்வர்யம் அதர்மம் காமம் முதலிய மிருத்

யுவின் ஜயத்தையும் அவ்யாக்ருதோபாஸனத்தால் பிரகிருதிலயம் என்று கூறப்படும் பிரகிருதியில் வெகு காலம் லயித்து துக்காநுபவமே இல்லாமலிருக்கும் நிலையாகிய அபரமோக்ஷத்தையும் அடையலாம் என்ற பொருளை, காண்வபாடத்தை அனுஸரித்து, ஈசாவாஸ்யோபநிஷத்பாஷ்யத்தில் பகவத்பாதர் கூறியிருக்கிறார்.

பகவத்பாதரே மாண்டுக்ய காரிகா பாஷ்யத்தில், மூன்றாவதான அத்வைதப்ரகரணத்திலுள்ள, 25-ஆவது எண்ணிக்கையுள்ள—

संभूतेरपवादाच्च संभवः प्रतिषिध्यते ।

कोन्वेनं जनयेदिति कारणं प्रतिषिध्यते ॥

என்ற கௌடபாத காரிகையின் பாஷ்யத்தில், மாத்யந்தின பாடத்தை அநுஸரித்து, ஸம்பூதி அஸம்பூதி இவற்றின் ஸமுச்சயத்தைக் கூறும் மூன்று மந்த்ரங்களின் பொருளை முந்தியும், வித்யை அவித்யை இவற்றின் ஸமுச்சயத்தைக் கூறும் மூன்று மந்த்ரங்களின் பொருளைப் பிந்தியும் விளக்கியிருக்கிறார். அங்கு விளக்கபபட்ட அந்த முதல் மூன்று மந்த்ரங்களின் பொருள் வருமாறு—

அவற்றுள் முதல் மந்த்ரத்தில் கூறிய ஸம்பூதி என்பது, 'सम्यक् भूतिरैश्वर्यं यस्यास्सा' என்ற வ்யுத்பத்தியால் அணிமாதி ஐச்வர்யங்களையுடைய ஹிரண்யகர்ப்ப ஸ்வரூபம். அதற்கு வேறான கர்மா அஸம்பூதியாகும். இவையே, இரண்டாவது மந்த்ரத்திலும் ஸம்பவம், அஸம்பவம் என்ற ஒரே பொருளுள்ள வேறு பதங்களால் கூறப்பட்டிருக்கின்றன. மூன்றாவது மந்த்ரத்தில், 'ஸம்பூதியையும் விநாசத்தையும் சேர்த்து

உபாஸிக்கவேண்டும். விநாசத்தால் மிருத்யுவை விலக்கி, ஸம்பூதியால் அமிருதத்தை அடைகிருன்' என்று கூறப்பட்டதில் 'விநாசம்' என்று புதிய வேறு ஒரு பதத்துடன் பிரயோகம் பண்ணப்பட்டாலும், அதற்கு முதல் இரண்டாவது மந்திரங்களில் கூறப் பட்ட ஹிரண்யகர்ப்ப ஸ்வரூபமும் கர்மாவுமே பொருள் என்று கூறவேண்டும். அவ்விதம் கூருமற்போனல், முன் கூறியபடி சேர்த்து உபாஸிக்கும்படி கூறியது ஒன்றை, அதை ஸ்தாபிப்பதற்காகத் தனித்தனியாக உபாஸிக்கக் கூடாது என்று மற்ருென்றை நிந்திப்பது, என்று ஏற்படுவதனுல் பொருத்தமில்லாமல் போய் விடும் அல்லவா ?

அதில் 'விநாசம்' என்ற பதத்தினுல் கூறப் பட்டது, நச்வரமான பலனை அளிப்பதும் அணிமாதி ஐச்வரியங்களைக் கொடுக்காததுமான கர்மாவேயாகும். ஸம்பூதி பதத்தினுல் முன் கூறியபடி அணிமாதி ஐச்வரி யத்தையுடைய ஹிரண்ய கர்ப்ப ஸ்வரூபமே கூறப் பட்டது. இங்கு முதல் மந்திரத்தில், 'येऽसंभूतिमुपा-सते' என்ற இடத்தில், அகாரப்ரச்லேஷத்தால் அஸம் பூதி என்றும் இரண்டாவது மந்த்ரத்தில் அஸம்பவம் என்றும் கூறப்பட்ட கர்மாவே விநாசம் என்ற பதத் தால் மூன்ருவது மந்த்ரத்தில் கூறப்பட்டபடியால், மீதியாக உள்ள ஹிரண்யகர்ப்ப ஸ்வரூபமே முதல் இரண்டாவது மந்த்ரங்களில் ஸம்பூதி ஸம்பவம் என்ற பதங்களால் கூறப்பட்டபடி, மூன்ருவது மந்த்ரத்திலும் ஸம்பூதி என்று கூறப்படுவது பொறுத்தமானபடியால், 'संभूतिं च विनाशं च' என்ற முதல் பாதத்தில் அகார லோபமும், 'संभूत्यामृतमश्नुते' என்ற நான்காவது

பாதத்தில் அகார ப்ரச்லேஷமும் கூற வேண்டிய தில்லை. ஆகவே, ஹிரண்யகர்ப்போபாஸனம், கர்மா இவற்றின் ஸமுச்சயம் இங்கு விதிக்கப்பட்டது. கர்மாவினுல் ஸ்வாபாவிகமான நிஷித்த கர்ம ஜ்ஞானங்களில் ப்ரவ்ருத்திப்பதாகிய ம்ருத்யுவிலகி, ஹிரண்யகர்ப்ப, ஸ்வரூபோபாஸனத்தால் அணிமாதி ஐச்வரியப் ப்ராப்தியாகிய அமிருதம் கிடைக்கிறது என்று ஸம்பூதி அஸம்பூதி இவற்றின் ஸமுச்சயத்தை விதிக்கும் முதல் மூன்று மந்த்ரங்களின் பொருள் ஸிந்தித்தது.

மாத்யந்தினபாடப்படி, பிறகு கூறப்பட்ட வித்யை அவித்யை இவற்றின் ஸமுச்சயத்தை விதிக்கும் பிந்திய மூன்று மந்த்ரங்களின் பொருளை மாண்டுக்ய காரிகா பாஷ்யத்தில் பகவத்பாதர் கூறியிருப்பதை இனி நிரூபிக்கிறோம்.

வித்யை என்பது, நிர்குண ப்ரஹ்ம ஜ்ஞானமாகிய பரமாத்ம ஜ்ஞானம். அவித்யை என்பது, ஸம்பூதி அஸம்பூதி இவற்றைச் சேர்த்து உபாஸிக்கவேண்டும் என்று முந்திய மூன்று மந்த்ரங்களினுல் கூறப்பட்ட ஹிரண்ய கர்ப்ப ஸ்வரூபோபாஸனம் கர்மாநுஷ்டானம் என்ற இரண்டையும் சேர்த்து அநுஷ்டிப்பதாகிய ஸமுச்சயம். அது பரமாத்ம ஜ்ஞானத்தைக் காட்டிலும் வேருகவும், அத்துடன் சேர்ந்து அநுஷ்டிப்பதில் விரோதமுள்ளதாகவும், அவித்யாவஸ்தையில் செய்யக் கூடியதாகவும் இருப்பதனுல், அந்த ஹிரண்ய கர்ப்போபாஸன கர்ம ஸமுச்சயம் அவித்யை என்ற பதத்தால் கூறப்படுகிறது. இந்த ஸமுச்சயமாகிய அவித்யையும் பரமாத்ம ஜ்ஞானமாகிய வித்யையும் சேர்த்து அநுஷ்

டிக்க முடியாது; ஆகையால் இங்கு ஸம ஸமுச்சயம் அதாவது ஒரே காலத்தில் ஒருவனே இரண்டையும் சேர்த்து அநுஷ்டிப்பது என்பது விவக்ஷிதமில்லை. ஆனால், 'க்ரமஸமுச்சயம்' அதாவது ஒருவனே ஒன்றை முந்தி அநுஷ்டித்து விட்டு, மற்றொன்றைப் பின்பு அநுஷ்டிப்பது, அதாவது ஹிரண்ய கர்ப்போபாஸன கர்ம ஸமுச்சயமாகிய அவித்யையை முந்தி அநுஷ்டிக்க வேண்டும். அவ்விதம் அதை அநுஷ்டிப்பதனால் சித்தத்துக்கு ஸம்ஸ்காரம் சுத்தி ஏற்படும்; ஆசைகள் விலகும்; வேதாந்த சாஸ்த்ரார்த்த விசாரத்தில் அதிகாரம் வரும். பிறகு, குருமுகமாய் வேதாந்த சாஸ்த்ரார்த்த விசாரம் செய்ய, அதன் முகமாக பரமாத்ம ஜ்ஞானம் ஏற்படும். இவ்விதமான 'க்ரமஸமுச்சயமே' இங்கு விவக்ஷிதம்.

இவ்விதம் கிரமமாக அவித்யை வித்யை இரண்டின் ஸமுச்சயத்தை அனுஷ்டிப்பவன் முந்தி அநுஷ்டிக்கப்பட்ட ஹிரண்யகர்போபாஸனகர்ம ஸமுச்சயமாகிய அவித்யையினால் மிருத்யுவை அதாவது கர்ம பலன்களில் ஆசை முதலிய ஏஷணைகளுடன் கர்மாவில் பிரவிருத்திப்பதாகிய பந்த காரணமான மிருத்யுவை விலக்கிப் பிறகு சாஸ்த்ராசார்யோபதேசத்தால் ஏற்பட்ட பரமாத்ம வித்யையால் அமிருதத்தை அதாவது முக்கியமான பரமோக்ஷத்தை இங்கேயே அடைகிறான்; சம்சாரபந்தத்திலிருந்து விடுபடுகிறான் என்பது வித்யாவித்யா ஸமுச்சயத்தைக் கூறும் பிந்திய மூன்று மந்த்ரங்களின் பொருள்.

ஈசாவாஸ்யத்தில் பிறகு கூறப்பட்ட மார்க்க யாசனம் பின் மந்த்ரத்தில் கூறிய பரமாத்ம ஜ்ஞானத்

தின் பலமான மோக்ஷத்தை அநுவிபப்பதற்காகச் செய்யப்பட்டதன்று; ஆனால், முன் மந்த்ரங்களில் கூறிய உபாஸனா கர்ம ஸமுச்சயத்தின் பலத்தை ப்ரஹ்மலோகத்தில் அநுபவிப்பதற்காகச் செய்யப் பட்டது என்று அறிய வேண்டும்.

இவ்விடத்தில் ஒரு சந்தேகம் ஏற்படுகிறது; அதாவது ஈசாவாஸ்யோபநிஷத்தில் காண்வபாடம் மாத்யந்தினபாடம் இரண்டிலும் மேலே குறிப்பிட்டபடி ஆறு மர்த்ரங்களின் கிரமம் அதாவது வரிசை மாறுபட் டிருந்தாலும், அவற்றின் பொருளில் வேறுபாடு இருக்க என்ன காரணம்? மாத்யந்தின பாடப்படி ஈசாவாஸ்யோபநிஷத்துக்கு 'ஈசாவாஸ்யரஹஸ்ய விவ்ருதி' என்ற வியாக்கியானம் செய்த ராமசந்த்ர பணடிதர் என்பவர், தமது வியாக்கியானத்தில், பகவத் பாதர் காண்வ பாடத்தின்படி பாஷ்யம் செய்ததில் கூறிய பொருளையே கூறியிருக்கிறார். அதனால் பொருளில் வேறுபாடு இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்று தெரியவருகிறதல்லவா?

மற்றுமொரு சந்தேகம்; அதாவது—'பகவத்பாதர் ஈசாவாஸ்யோபநிஷத்தில் காண்வபாடப்படி பாஷ்யம் செய்தவர், மாண்டுக்ய காரிகா பாஷ்யம் செய்யும் பொழுது மேற்படி ஆறு மந்த்ரங்களுக்கும் தாம் ஈசா வாஸ்யோபநிஷத் பாஷ்யத்தில் ஆதரித்த காண்வ பாடக்ரமத்தை மாற்றி, மாத்யந்தின பாடக்ரமத்தை ஆதரிப்பதற்கு என்ன காரணம்?' என்று. இந்த இரணடு சந்தேகங்களுக்கும் பரிகாரம் வருமாறு:—

அத்வைத ஸம்ப்ரதாயப்ரவர்த்தகரான ஸ்ரீ கௌட பாதாசார்யர் தாம் செய்த 'மாணடுக்ய

காரிகை'யில், மூன்ருவதான அத்வைத ப்ரகரணத்தில், "அஜாதி வாதம் அதாவது உலகிலுள்ள காரிய காரண பாவம் முதலியது வைதம் பாரமார்த்திகமன்று; அது வியாவஹாரிகம் என்று கூறப்படும் வியவஹார காலத்தில் மாத்திரம் பாதிக்கப்படாத முத்யா வஸ்து, கார்யகாரண பாவ மற்ற அத்வைத பரப்ரஹ்மமே பாரமார்த்திக தத்துவம்'' என்று நன்கு விளக்குகிருர்.

அங்கு,

संभूतेरपवादाच्च संभवः प्रतिषिध्यते ।
कोन्वेनं जनयेदिति कारणं प्रतिषिध्यते ॥

என்ற 25-ஆவது காரிகையில், பரப்ரஹ்மத்தின் ப்ரதமப்ரதான கார்யமாய் வழங்கப்படுவதும், அணிமாதி ஐசுவரியமுடையதுமான ஹிரணய கர்ப்ப ஸ்வரூபம், 'अन्धं तमः प्रविशन्ति ये संभूतिमुपासते । ततो भूय इव ते तमो य उ संभूत्यां रताः ॥' என்ற ஈசாவாஸ்யோபநிஷத்திலுள்ள மந்த்ரத்தின் உத்தரார்த்தத்தில் அபவதிக்கப்படுவதனுல், ப்ரதான மல்ல நிபர்ஹண ந்யாயத்தால், அதாவது 'பிரதானமாக உள்ளது நிராகரிக்கப்பட்டால், மற்ற அப்பிரதானமாக உள்ளவையும் நிராகரிக்கப்பட்டு விடும்' என்ற நியாயத்தால், உலகிலுள்ள எல்லாக் காரியங்களும் அபவதிக்கப்படுகின்றன அதாவது இல்லை என்று நிஷேதிக்கப்படுகின்றன. 'जात एव न जायते कोऽन्वेनं जनयेत् पुनः' என்ற ப்ருஹதாரண்யகோபநிஷத்தின் மூன்ருவது அத்தியாயம், சாகல்யப்ராஹ்மணம் என்ற ஒன்பதாவது ப்ராஹ்மணத்தின் முடிவிலுள்ள ச்லோகததில், 'कोन्वेनं जनयेत्' என்ற பாகத்தில் ''உண்டாகும் பொருளை

உண்டாக்குவது யார்?' என்று காரண ஸ்வரூபம் பிரதி ஷேதிக்கப்படுகிறது. ஆகையால் காரியம் காரணம் ஆகிய இரண்டுமே பாரமார்த்திகமன்று என்று கூறியதாகிறது.

ஈசாவாஸ்யோபநிஷத்தில், ஸம்பூதி அஸம்பூதி இவற்றின் உபாஸன ஸமுச்சயத்தை விதிக்கும் மூன்று மந்த்ரங்களுக்கும் காண்வ பாடப்படியுள்ள ஈசாவாஸ் யோபநிஷத் பாஷ்யத்தில் பகவத்பாதர் கூறிய பொருள், அதாவது ஸம்பூதி என்பது, காரியமாயுள்ள வ்யாக்ருதமான ஹிரண்ய கர்ப்ப ஸ்வரூபம்; அஸம்பூதி என்பது, காரியமாக இல்லாமல் அநாதியான அவ்யா கிருதம் என்கிற காரண ஸ்வரூபம் என்ற பொருளே மாண்டுக்ய காரிகை செய்த கௌடபாதருக்கும் ஸம்மத மாக இருந்தால், 'अन्धं तमः प्रविशन्ति'' என்ற மந்த்ரமே பூர்வார்த்தத்தில் காரண ஸ்வரூபத்தையும், உத்தரார்த் தத்தில் காரிய ஸ்வரூபத்தையும் நிஷேதிக்கிறபடியால், அதைக் காரிய ஸ்வரூபநிஷேதத்துக்கு மாத்திரம் பிரமாணமாகக் காட்டிவிட்டு, காரண ஸ்வரூபநிஷே தத்துக்கு வேறு ப்ருஹதாரண்யகோபநிஷத் வாக் யத்தை, கௌடபாதர் பிரமாணமாகக் காட்டவேண்டிய தில்லை—அவ்விதம் அவர் வேறு பிரமாணம் காட்டிய படியால், அவருக்கு அந்த மந்த்ரங்களுக்கு வேறு பொருள் விவக்ஷிதம் என்று தெரிகிறது. அந்த வேறு பொருளையே மாண்டுக்ய காரிகா பாஷ்யத்தில் சங்கர பகவத்பாதர் காட்டியுள்ளார். அதாவது—'ஸம்பூதி' என்பது, மேலே காட்டியபடி பூதியை அணிமாதி ஐசுவரியங்களையுடைய பிரதான காரியமான ஹிரண்ய கர்ப்ப ஸ்வரூபம். அஸம்பூதி என்பது, அதற்கு வேறான

தான அணிமாதி ஐசுவரியத்தைக் கொடுக்காத கர்ம ஸ்வரூபம்' என்று பொருள். இப்பொழுது அஸம்பூதி என்ற பதத்துக்கு, காரியமாயில்லாத என்ற பொருள் இல்லை; அந்தப் பொருள் இருந்தால் காரியமான கர்மாவை வாங்க முடியாதல்லவா? ஆகவே அநாதியான காரணம் தான் அந்த வாக்கியத்தில் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது என்று பிரமாணம் காட்ட முடியாதபடியால், வேறு வாக்கியத்தை அவர் பிரமாணமாகக் காட்டியது பொருத்தமாகும்.

இவ்விதம் ஸம்பூதி அஸம்பூதி ஸமுச்சயத்தைக் கூறும் மூன்று மந்த்ரங்களுக்கும் வேறு பொருள் கூறக் காரணம் காட்டினோம். இனி, வித்யா அவித்யா ஸமுச்சயத்தைக் கூறும் மூன்று மந்த்ரங்களுக்கும் வேறு பொருள் கூறவேண்டிய காரணத்தைக் கூறுகிறோம்.

வித்யா அவித்யா ஸமுச்சயம் என்பது உபாஸனா கர்மஸமுச்சயம் என்று ஈசாவாஸ்யோபநிஷத்பாஷ்யத்தில் கூறியிருக்கிறது. ஸம்பூதி அஸம்பூதி ஸமுச்சயம் என்பது, உபாஸனா கர்ம ஸமுச்சயத்தைக் காட்டிலும் வேறான 'வ்யாகிருத அவ்யாக்ருத உபாஸனங்கள் இரண்டின் ஸமுச்சயம்' என்றும் அங்கே கூறியிருக்கிறது. மாண்டுக்ய காரிகாபாஷ்யத்தில் மேலே காட்டிய கௌடபாத காரிகையின் கருத்தின்படி, ஸம்பூதி அஸம்பூதி ஸமுச்சயம் என்பது ஹிரண்ய கார்ப்போபாஸனா கர்ம ஸமுச்சயம் என்று கூறவேண்டியதாக ஏற்பட்டு விட்டதனால், வித்யா அவித்யா ஸமுச்சயமும் உபாஸனா கர்ம ஸமுச்சயமேதான் என்று கூறினால், இரண்டு ஸமுச்சயங்களுக்கும் வித்தியாசம் இல்லாததனால் பௌனருக்த்யதோஷம் வரும். அதனால்

ஏககாலத்தில் செய்யப்படும் ஸமஸமுச்சயமான ஹிரண்ய கார்ப்போபாஸனு கர்ம ஸமுச்சயத்தைக் காட்டிலும் வேருனதாயும், வெவ்வேறு காலங்களில் செய்யப்படும் கிரம ஸமுச்சயமாயுமுள்ள ஹிரண்ய கர்ப்போபாஸனு கர்ம ஸமுச்சயரூப அவித்யைக்கும் பரமாத்ம ஜ்ஞானரூப வித்யைக்கும் உள்ள ஸமுச்சயம் வித்யா அவித்யா ஸமுச்சயமாகும் என்று வேறு பொருள் மாண்டுக்ய காரிகாபாஷ்யத்தில் கூறப்பட்டது பொருத்தமே. மேலே காட்டிய வித்யா அவித்யா ஸமுச்சயத்தில், அவித்யா பதத்தின் பொருளில் உபாஸனமும் அடங்கி விட்டதனுல, வித்யா என்பது பரமாத்மஜ்ஞானம் என்று கூறியதாயிற்று.

இனி, மாண்டுக்ய காரிகா பாஷ்யத்தில் காண்வ பாடக் கிரமத்தை விட்டு விட்டு, மாத்யந்தின பாடக் கிரமத்தை அநுஸரித்து மந்த்ரங்களின் பொருள் கூறியதற்குக் காரணத்தை விளக்குவோம்.

காரியங்களுக்குள் பிரதானமான ஹிரண்ய கர்ப்ப ஸ்வரூபமாகிய ஸம்பூதியின் உபாஸநத்தை ஈசாவாஸ் யோபநிஷத்தில் அபவதித்திருப்பதனுவ, ஸம்பவமாகிய காரியம் எல்லாமே வஸ்துவாகாது, மிதத்யைதான் என்று நிஷேதித்திருப்பதாக மாண்டுக்ய காரிகையில் கூறியிருக்கிறது. 'संभूत्यामृतमश्नुते' என்ற ஈசாவாஸ்ய உபநிஷத் வாக்கியத்தில், ஸம்பூத்யுபாஸனத்தால் முக்கியமான மோக்ஷம் ஏற்படுவதாகக் கூறியிருக்கும் பக்ஷத்தில் அந்த ஸம்பூதியை அங்கு அபவதிப்பது அநுசிதமாகும். ஆகையால் அவித்யாவஸ்தையில் அநுபவிக்கப்படும் அபரமோக்ஷமே அதன் பலன் என்றும், 'विद्ययाऽमृतमश्नुते' என்ற மாத்யந்தின பாடப்

படி, பிந்திய வாக்கியத்தில் வித்யையால் அதாவது பரமாத்மஜ்ஞானத்தால் மோக்ஷம் ஏற்படுவதாகச் சொல்லுவதுதான் முக்கியமான மோக்ஷம் என்றும் ஒப்புக் கொள்ள வேண்டும். மேலும், பரமாத்மஜ்ஞானம் ஏற்படுவதற்குப் பிரதி பந்தகமாக உள்ள ஏஷணை என்ற மிருத்யுவை விலக்குவதாகக் கூறப்படும் அவித்யையானது, ஹிரண்ய கர்ப்ப ஸ்வரூபமாகிய ஸம்பூதியின் உபாஸனம் கர்மா இவற்றின் ஸமுச்சய ரூபமானதால், அதில் ஸம்பூத்யுபாஸனம் சேர்ந்திருப்பதாலும் அதற்கு மோக்ஷம் பயன் அல்ல என்று ஏற்படுகிறது. ஆகையால் அதை அபவதிப்பது உசிதமே. இவ்விதம் வேறு பொருள் வேறு மந்த்ரக் கிரமம் முதலியவை ஸம்பூதியின் அபவாதத்தைக் கூறும் மாண்டுக்ய காரிகா பலத்தால் ஏற்படுவதனுல் பகவத்பாதர் மாத்யந்தினபாட க்ரமத்தை அநுஸரித்து மாண்டுக்ய காரிகாபாஷ்யத்தில் வேறு பொருள் கூறினுர் என்பது பொருத்தமே என்று அறியவேண்டும். இங்கு மற்றும் ஒரு சந்தேகம், அதாவது—

காண்வ பாடக் கிரமப்படி முன் மூன்று மந்த்ரங்களில் கூறும் உபாஸனு கர்ம ஸமுச்சயமும் பின் மூன்று மந்த்ரங்களில் கூறும் வ்யாக்ருத அவ்யாக்ருத உபாஸனு ஸமுச்சயமும் பரமாத்மஜ்ஞானம் போல் முக்கிய மோக்ஷத்தை அளிக்காமல் அவித்யாவஸ்தையில் அனுபவிக்கப்படும் அபரமோக்ஷத்தை அளிப்பதாக இருப்பதனுல், காண்வ பாடப்படியும் ஸம்பூதியின் அபவாதத்தால் ஸம்பவம் அதாவது காரியம் எல்லாம் பிரதிஷேதிக்கப்படுகிறது என்று மாண்டுக்ய காரிகையில் கூறலாமே என்று.

அதற்குப் பரிஹாரம் வருமாறு—மாத்யந்தின பாடத்தில், வித்யா அவித்யா ஸமுச்சயம் பின்னல் கூறியிருப்பதனுல், முன்னுல் கூறிய ஸம்பூத்ய அஸம்பூதி ஸமுச்சயத்தை அவித்யா பதத்தால் அநுவதித்து, அதனுல் ஏஷணையாகிய ம்ருத்யுதரணம் ஏற்படுகிறதே தவிர வித்யையால் அதாவது பரமாத்மஜ்ஞானத்தால் தான் மோக்ஷம் ஏற்படுகிறது என்று கூறுவதற்குச் சௌகரியம் இருக்கிறது. காண்வ பாடக் கிராமத்தில், அந்தச் சௌகரியம் இல்லே. அதனுலேயே பகவத் பாதர், மாத்யந்தின பாடக் கிராமத்தை அநுஸரித்து, மாண்டுக்ய காரிகா பாஷ்யம் செய்தார் என்று ஊகிக்க இடம் இருக்கிறது.

'को न्वेनं जनयेत' என்ற ப்ருஹதாண்யக வாக்கியத்தில், 'கிம்சப்தம், காரணம் எது?' என்ற பிரச்ன அர்த்தத்தில் கூறியிருப்பதாக ப்ருஹதாரண்யக பாஷ்யத்தில் பிரகரணத்தை அநுஸரித்துச் சொல்லியிருக்கிறது; மாண்டுக்ய காரிகா பாஷ்யத்தில், காரணம் ஏது?' என்ற ஆக்ஷேபார்த்தம் 'कारणं प्रतिषिध्यते' என்ற காரிகையின்படி கூறியிருக்கிறது என்று ஒன்றுக்கு ஒன்று விரோதம் வருகிறதே என்னும் சங்கை இங்கு ஏற்படுகிறது. அதற்குச் சமாதானம் கூறுவோம்.

அங்கே, 'காரணம் எது?' என்ற பிரச்சனத்துக்கு 'அஜ்ஞாநோபஹிதமான ப்ரஹ்மம் காரணம்' என்று பதில் கூறியிருக்கிறதே தவிர, சுத்த ப்ரஹமம் காரணம் என்று கூறவில்லே. அஜ்ஞானேபஹித ப்ரஹ்மமாகிய காரணம் பரமார்த்தமன்று; சுத்த ப்ரஹ்மம்தான் பரமார்த்தம். ஆகையால், பரமார்த்தத்தில் காரணம் கிடையாது என்று ஆக்ஷேபிப்பதில் விரோதமில்லே.

காரியம் பொய்யானபடியால், அதற்கு வாஸ்தவமான காரணம் கிடையாது' என்ற கருத்தினாலும் காரணத்தை ஆக்ஷேபிக்கலாம். இவ்விதம் ஆக்ஷேபம் என்ற பொருள் தாத்பரியத்தால் கிடைப்பதனால், அக்ஷேபார்த்தம் கூறுவதிலும் விரோதமில்லை. அல்லது, ஆக்ஷேபார்த்தத்திலேயே, 'कोन्वेनं जनयेत्' என்ற வாக்கியம் வேறு எங்கேயாவது உபநிஷத்தில் இருக்கலாம். கௌடபாதர் அதைப் பிரமாணமாகக் காட்டியிருப்பதாகவும் வைத்துக் கொள்ளலாம்

இவ்விதம் ஈசாவாஸ்யோபநிஷத்தில் உள்ள ஆறு மந்த்ரங்களுக்கும் காண்வ பாடத்தையும் மாத்யந்தின பாடத்தையும் அநுஸரித்து, பகவத்பாதர் இரண்டு வித மான பொருளைக் கூறினாலும், அந்த இரண்டு விதப் பொருள்களும் அத்வைத ஸித்தாந்தத்துக்கு விரோத முள்ளவை ஆகா என்பதை அறியவேண்டும். அத்வைத ஸித்தாந்தத்தில் பரமார்த்தமான பரப்ரஹ்மத்தின் ஜ்ஞானமே முக்கியமான மோக்ஷத்துக்குச் சாதனம். கர்ம உபாஸன ஸமுச்சயமோ, வ்யாகிருத அவ்யாக்ருத உபாஸனங்களின் ஸமுச்சயமோ, எதுவானாலும் அவை அபரமோக்ஷத்துக்கோ சித்தசுத்தி சித்தைகாக்ரயங்களுக்கோ ஆத்மஜ்ஞானப்ரதிபந்தக நிவிருத்திக்கோ சாதனமே தவிர, முக்கிய மோக்ஷத்துக்குச் சாதனங்கள் ஆகமாட்டா என்பது கவனிக்க வேண்டிய விஷயம்.

ஒரே மந்த்ரத்துக்குப் பல இடங்களில் பலவித மான பொருள்களைச் சந்தர்ப்பத்தை அநுஸரித்துச் சொல்வதை, ஸாயணாசார்யர் எழுதிய வேத பாஷ்யத்திலும் பல இடங்களில் பார்க்கலாம்.

ஸ்ரீ பகவத்பாதர், வித்யா அவித்யா ஸமுச்சயத்தைக் கூறும் ஈசாவாஸ்யோப நிஷத்திலுள்ள மந்திரத்துக்கு, மாண்டூக்ய காரிகா பாஷ்யத்தில் போல ஐதரேய உபநிஷத் பாஷ்யத்திலும் ஆரம்ப விசாரத்தில் கிரமமாக ஒரே மனிதனிடத்தில் வித்யையாகிய ஜ்ஞானம் அவித்யையாகிய கர்மா என்ற இரண்டுக்கும் ஸமுச்சயம் என்றே பொருள் கூறியிருக்கிறார்.

இவ்விதம் என் புத்தியில் எட்டிய வரையில் கூறினேன். இதிலுள்ள யுக்த அயுக்தங்களைப் பெரியோர்கள் விசாரித்து நிச்சயம் செய்யவேண்டும் என்று தெரிவித்து, இந்த விஷயத்தை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

*பரிசிஷ்டம் முற்றும்.*

---

*லிபர்ட்டி அச்சகம், சென்னை–1.*

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யாளுடைய அநுக்ரஹ பூர்வமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—50 |
| 2. | ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... .... | 0—50 |
| 3. | ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்நமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... | 0—25 |
| 4. | ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்கிருத மூலமும் (தமிழுரையுடனும்) .... .... .... | 2—50 |
| 5. | ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும் .... .... | 0—87 |
| 6. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் .... | 2—50 |
| 7. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்கிருதத்தில் .... .... | 0—30 |
| 8. | —ஷை—தமிழில் ச்லோகம், நாமாவளியும் .... .... | 0—25 |
| 9. | ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—87 |
| 10. | விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திரம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும் .... | 0—75 |
| 11. | ஸ்ரீ சாந்தி விலாஸம்—ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—75 |
| 12. | மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—62 |
| 13. | ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது | 1—75 |
| 14. | ஸ்ரீ துர்கா சந்திரகலா ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது .... .... ... | 0—50 |
| 15. | ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது .... .... .... | 0—75 |


ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்

4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1